திருப்போரூர்ச் சன்னிதானம் விளக்கிய சிதம்பர சுவாமிகட்கும், திருச்செந்தூர்க் கந்தர்கலிவெண்பாப் பாடியருளிய குமரகுருபர சுவாமிகட்கும், இன்னும் எண்ணரிய பத்தர் சித்தர் பரமஞாதாக்கட்கும் அந்தப் பரமான்மாவுஞ் சகற்குருவுந் தற்கொடை வள்ளலுமாய கந்தபகவான் உரிய திருவருள்புரிந்து பரகதி நீட்டிய பெருங் கருணைப்பாட்டைப் பெரியோ ருணர்கின்றார். பாரமார்த்திகமாகவுணரிற் சிவனடியாரெல்லாம் அவனடியாரெனவுமாவர்.

(௮௮)

சீட.—நன்று. அந்தத் தயாநிதியாகிய குமாரபகவான், தன்னை விசுவாசிக்கும் அடியவரை என்றும் இரக்ஷித்தருள்வேனென்று தனது திருவாக்கான் வெளியிட்ட மெய்ம்மொழி ஏதேனு முண்டுகொல்?

குரு.—சந்தேக சிகாமணியே! அன்னணமாய மெய்ம்மொழி பலவுள. அவற்றுட் சிறுவரை கிளக்குதும். சம்பவகாண்டத்தின் ௩௮-வது அத்தியாயத்துப் ௧௪, ௧௫, ௧௬-ம் சுலோகங்களில்—

"எமக்கபராத மெவரிழைப்பினும் அதனைச் சகிப்பேம்: எம்முடைய இரண்டு பாதாரவிந்தங்களைச் சரணடைந்த அடியவர்க்கெவரேனுங் கேடு புரியின் அதனைச சகியேம். அக்கேடு, புரிவோர் தேவரெனினும் அசுரரெனினும் எம்மாலென்றுந் தண்டிக்கப்படுபவரே."

என வீரபாகுதேவர் முன்னிலையிலும், ௬௧-வது அத்தியாயத்துப் ௧௧, ௧௨, ௧௩-ம் சுலோகங்களில்—



"உலகினில் எம்மைச் சரணடைந்தோர்க்குப் பயம் யாது? இச்சகத்தில் எம்மடியவர்க்குப் பகைஞர் யாவர்? பிணியுமுளதோ? மானுடப்பதடியாயுள்ள வொருவன் அறிவீனத்தால் எம்மடியவரைப் பகைப்பானாயின் அவன் எம்மையே பகைத்தவனாவன்: எமக்கபராதஞ் செய்தானது செய்கையை யாம் மன்னிப்பாம். அந்தத் துராத்துமாவின் செய்கையை யொருபோதும் மன்னியேம்: இந்திரனால் ஆதரிக்கப்படினும் அவனைக் கண்டனஞ் செய்துவிடுவாம். ஞாலத்தில் எம் பக்தர்களை ஆதரிப்போரையே யாம் ஆதரிப்பாம்: இரக்ஷிப்பாம்"

என நாரதர் முன்னிலையிலுங் கந்தபிரான் திருவாய் மலர்ந்தருளினன். ஆகலின், அற்புடையாய்! நீயும் அவனடியவர்க் கெத்துணையும் இடையூ றிழையாமே என்றும் இதமேசெய் தினிதுய்தி.

(௮௯)

சீட.—அப்படியே, கோளறுகுமாரக்கடவுளை வழிபடுபவர், வெஞ்சூர் முதலாய சூரபன்மனுடற்பிளவிலெழுந்த மஞ்ஞையையும் வணங்கல் வேண்டுமெனு நியாய முண்டுகொல்?

குரு.—அரிய தவஞ்செய்து பெரிய இடம்பெற்ற சூரபன்மனது தவவீக்கம் வீண்போகாமல் பிரான், வற்சலம் வைத்து அடிமைப்பணிக் கேன்றுகொள்வதாகத் திருவுளங்கொண்டு மகாவிச்சுவரூப தரிசனங்கொடுத்து, இறுதியிலவனது ஆதிக்கருத்து முற்றுறும்படி மயிலுஞ் சேவலுமெனக் கொண்டிருத்தலின் அவைகளை வியனுகமதித்தேத்தல் அவனடியர் கடன்மை கண்டாய். உபதேச